18th February 1961]

**Sri N. K. PALANISAMI :** கனம் அமைச்சர் அவர்கள் எல்லா மாகாணங்களிலும் ஒரே "டாரிப்" விதிப்பது பற்றி விவாதிக்கப் பட்டது என்று சொன்னார்கள். அப்படியானால் நம்முடைய மாகாணத்திற்கு எந்த அளவு சார்ஜ் விதிக்கப்படுகிறது? பல சமயங்களில் நமது மாகாணத்தில் சார்ஜ் குறைவாக விதிக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியானால், சார்ஜை உயர்த்துவதற்கு திட்டமா? அல்லது இன்னும் குறைப்பதற்கு உத்தேசமா?

**The Hon. Sri V. RAMAIAH :** இந்த சப்-கமிட்டியில் விவாதிக்கப்பட்டது பூராவையும் மூலக் கேள்விக்கு பதில் அளித்த நேரத்தில் சொன்னேன். என்ன முடிவு, எந்த மாதிரி சாதகமாகும் என்பதெல்லாம் சதர்ன் ஜோனல் கவுன்சில் கூட்டம் கூடினால் தான் தெரியும்.

*Handloom*

* 330 *Q.*—**Sri S. M. ANNAMALAI :** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

கைத்தறி தொழிலுக்கு நிதி உதவிக் கார்ப்பரேஷன் ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா?

The Hon. Sri R. VENKATARAMAN : The Government have included in the draft Third Five-Year Plan a scheme for the establishment of Handloom Finance Corporation in this State with Central assistance.

**Sri S. M. ANNAMALAI :** இதைக் குறித்து ஸ்டேட் ஹாண்ட்லூம் போர்டின் அபிப்பிராயம் என்ன? இதுபற்றி அவர்களை சர்க்கார் கலந்தாலோசித்தார்களா?

**The Hon. Sri R. VENKATARAMAN :** 1959-ம் வருஷத்தில் தென் பிராந்திய மண்டலத்தில் இருக்கக்கூடிய கைத்தறி இலாகா மந்திரிகள் எல்லோரும் இங்கு கூடினார்கள். இங்கு செமினார் நடந்தது. அந்தச் செமினாரில் எந்தவிதமான நிதிக் கார்ப்பரேஷன் வைக்கவேண்டுமென்று முடிவு எடுக்கப்பட்டது. அந்த முடிவை இந்த சர்க்கார் மத்திய சர்க்காருக்கு சிபார்சு செய்திருக்கிறார்கள்.

Sri A. A. RASHEED : May I know whether any financial aid has been given to the handloom weavers on account of the accumulation of " Bleeding Madras " cloth?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, it is a different question.

Sri K. VINAYAKAM : Sir, what is the financial commitment of this Corporation and whether financial aid would be got from the Central Government and if so, what will be the method by which this handloom industry would be assisted?

[18th February 1961

THE HON. SRI R. VENKATARAMAN : This is now in the stage of proposal. The State Government have proposed to make a contribution of Rs. 5 lakhs to this Corporation. They have also requested the Government of India to finance this Corporation, and the question of actual amount is still under examination. This Corporation will help the handloom weavers and master weavers outside the co-operative field to market their goods. Financial assistance by way of loans, etc., will be given to the weavers outside the co-operative field.

**SRI A. VEDARATHNAM :** *நிதி உதவி கார்ப்பரேஷனிலிருந்து கைத்தறிக்கும் உதவி செய்ய முடியாதா? கைத்தறிக்கு மாத்திரம் ஒரு தனி நிதி உதவி கார்ப்பரேஷன் ஏற்படுத்த வேண்டிய அவசியம் என்ன? இதைப்போன்று ஒவ்வொரு தொழிலுக்கும் ஒரு கார்ப்பரேஷனை ஏற்படுத்துவதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?*

**THE HON. SRI R. VENKATARAMAN :** *இண்டஸ்டிரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷனிலிருந்து கைத்தறிக்கு உதவி செய்வது என்பது கஷ்டம். ஏனென்றால் அதில் பரிசீலனை செய்ய வேண்டிய விஷயங்களெல்லாம் வெவ்வேறு. மேலும் கைத்தறிகள் ஏராளமாக இருக்கும் காரணத்தினால் அதற்கு தனியாக ஒரு கார்ப்பரேஷன் வைத்தால் அதற்கு அதிக வேலை இருக்கிறது. அதற்கு பொருளும் அதிகமாக தேவையாக இருக்கிறது. அதற்கு தனியாக ஒரு கார்ப்பரேஷன் நடத்தினால் கைத்தறிக்கு உதவி செய்ய முடியும் என்று சர்க்கார் நினைக்கிறார்கள்.*

*Electrification*

* 337 *Q.*—**SRI S. M. ANNAMALAI :** *கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) வட ஆற்காடு மாவட்டம், போளூர் தாலூகா அலுவலகத்திற்கு மின்சார விளக்குகள் போடப்பட்டுள்ளனவா?*

*(இ) இல்லையாயின், எப்போது போடப்படும்?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : *(அ)* In the cases

(இ) The Government have since sanctioned the electrification of several revenue office buildings. The Taluk Office building, Polur, is also one of the offices, the electrification of which has been ordered.

**SRI S. M. ANNAMALAI :** *சென்ற வரவு செலவு திட்ட விவாதத்தின்போது நான் இதைப்பற்றி சட்ட மன்றத்தில் சொன்னேன். அப்பொழுது கனம் மந்திரி அவர்கள் 'இவ்வளவு காலதாமதம் ஆவதற்குக் காரணம் கனம் மெம்பர்தான், அவர் இதை எடுத்துச் சொல்லவில்லை முன்னமேயே' என்று சொன்னார்கள். ஐந்து, ஆறு அடி தூரத்தில்தான் மின்சாரம்*